<u>வாழும் பாதர்தோம்:</u> <u>46ம் பக்கத் தொடர்ச்சி :</u>

"தோற்றத்தின் பாதி விதிதான் விளம்பரம்: விளம்பரத்தின் வேலை வாடிக்கையைத் தூக்கித் சொல்லுவதே. விளம்பரம் என்பது ஒரு இனிமையான விமர்சனம். ஆனால், அழப்பமையான ஒரு வாத்தியமாகும். விமர்சனம் குறையையும் எடுத்துச் சொல்லும், விளம்பரம் — மிகைப் பெருமையாதும் — குறையை எடுத்துச் சொல்லாது. நிறைகளையே தூக்கிக் காட்டும். * **

"நவீனப் பரபரப்பு வாழ்க்கைப் போக்கில் நாமாக எதையும் தேடிப் போய்த் தேர்ந்தெடுத்துக் கொள்ள அவகாசம் இருப்பதில்லை. * * *

"நண்பன்: வாழ்வுப் பாதையில் நம்முடன் தோளோடு தோள் உராய்ந்து நம் வேக நடை போட உதவுகிற உற்ற துணைவன்.

"வெறும் வெளிப் பகட்டுகளே மட்டுமே வெற்றி கண்டுவிட முடியாது. ஆடம்பர பகட்டு ஆரவாரம் எந்த நாட்டிலும் எப்பொழுதுமே இருக்கவே செய்யும். ஆனால், காலப் போக்கில் உண்மைச் சரக்கின் மதிப்பு வெளிப்பட்டே தீரும். * **

"செய்ய முடியாததைப் பற்றியும், ஏற்கனவே செய்து முடித்த நிகழ்ச்சிகள் கடமைகளைப் பற்றியும் நினைத்துப் பார்ப்பது நல்லதுதான். இனிமேல், வளர்ந்து செயலாற்றுவதற்கே அந்த நினைப்பு உதவ வேண்டும். சும்மா அசை போடுவதால் பயனில்லை. உணர்ச்சி வசப்பட்டு சாதனைத் தொகையைக் கொண்டு வாழும்படியும் பண்டைப் பெருமை பேசுவது நல்லதல்ல. * **

"ஒரு மொழி வளர்வது அம்மொழியைப் பேசும் மக்களைப் பொறுத்தது. மக்கள் வளர்ச்சி யுண்டேல், மொழி வளர்ச்சி இல்லை. மனத்தின் எண்ணங்கள், பல பாத்திரமான எண்ணப் பதிவுகள் ஒவ்வொன்றாக தோன்றிக் கொண்டே இருக்கும். எண்ணம் தெளிவானவுடன், அது கருத்தாக உருக் கொள்கிறது. கருத்துத் தெளிவானவுடன், அது சொல்லாகிறது. சொல் தெளிவானவுடன், அது கருத்தை ஒருவர் மற்றொருவர் பரிமாறிக் கொள்ளும் மொழியாகிறது. "மக்கள் மொழியை வளர்ப்பார்கள். பிறகு, மொழி மக்களை வளர்க்கும்". * **

"விளம்பரத்தைக் கொண்டும், வெற்று ஆரவாரமான விளம்பரத்தைக் கொண்டுமே, பல எழுத்தாளர்கள் வயிறு வளர்த்து வருகிறார்கள். வயிறுதான் வளர்கிறது — வாழ்வல்ல. * **

"தெய்வ மலைப்பதில் தவறில்லை; தெரிந்தும் கொள்ள முடியாத ஒன்றுதான் தெய்வம் இருக்கிறது. அசட்டையாய் வேலை செய்கிற எவருக்கும் அவன் காசுக்கும் உதவ மாட்டான். வருந்தி உழைத்து முயன்றாலல்லது எந்தத் துறையிலும் வெற்றி பெற முடியாது. தெய்வ அற்றவர்களை வாழ்விப்பதற்கு வழி; தெய்வ உள்ளவர்கள் பெருவாரியாய்ப் பெருகி, நாமெல்லாம் நிறைவதே பாடும்". * * *

"வாழ்க்கையோடு ஒட்டாத, வாழ்க்கையின் எந்த ஒரு கூறையும் அடித்தளமாய்க் கொண்டு காட்டாத எந்த இலக்கியம், கலை வெற்றியும் நீடித்து நிற்க முடியாது. * **

"நடந்த ஒன்றை வைத்துக் கொண்டு அது இன்ன மாதிரியாகவும் நடக்க முடியுமே என்று காட்டுவதுதான் கற்பனை. ஒன்றுக்கொன்று தொடர்பற்று வானத்தில் தொங்குவது அல்ல!" * **